### சாமவேத தத்வாகாரமெனும்

# கேனோபநிஷத்து*

* இவ்வுபநிஷத்து, சிஷ்யனுக்கும் குருவிற்கு நடந்த சம்பாஷணையாக விருக்க, மத்து வாசாரியர் பிரமாவுக்கும் சிவனுக்கு நடந்த சம்பாஷணை ரூப மெனக் கனவு கண்டெழுதினர் போலும்.

## காண்டம் - 1 - மந்திரம் - 1.

### சீடன்வினா

மனமானது எவராலே யேவப்பட்டுச் சிச்சித்துச் செல்கின்றது? பிராணன் எவராலே நியமிக்கப்பட்டுச் சஞ்சரிக்கிறது? எவராலிச் சிக்கப்பட்டு வாக்கின் மூலமாக மனிதர்கள் பேசுகிறார்கள்? எந்தத் தெய்வம் கண்களையும் செவிகளையும் தத்தம் நிலையில் சேர்த்துவைக்கி ன்றார்?

### ஆசிரியன் விடை, மந்திரம் - 2,

எக்காரணத்தினால் செவிக்குச் செவியாகவும், மனதிற்கு மனமாகவும், வாக்கிற்கு வாக்காகவும் இருக்குமிறைவனே, பிராணனுக்குப் பிராணனாகவும், கண்ணுக்குக் கண்ணாகவு மிருப்பதைப் புத்திமான்கள் தெரிந்து சுரோத்திராதிகளின் (பேரில் வைத்த வபிமானத்தை) விட்டுச் சென்மத்தினின்று நீங்கி முத்தர்களாகிறார்கள்.

### மந்திரம் - 3.

கண், வாக்கு, மனம் அவனில்போகா, அவனை நாமறியோம், எப் பிரகாரம் இதனைச்சீடனுக்கு உபதேசிக்கக்கூடும், அதுதெரிந்து கொண்டதற்கும் பின்னுந் தெரிந்து கொள்ளாததற்கும் வேறாகவே யிருக்கிறதென்று யாரெங்கட்கு அதைத்தெளிவாகச் சொன்னார்களோ, அத்தகைய பூர்வீகர்களாகிய பெரியோர்கள் வாக்கியத்தைக் கேட்டிருக்கிறோம.

### மந்திரம் - 4.

வாக்கால் எது பிரகாசிக்கப்பட வில்லையோ, எதனால் வாக்குப் பிரகாசிக்கப்படுகிறதோ அதையே பிரமமாக † நீயறி, எந்த வஸ்துவை இது பிரமமென்று உபாசிக்கிறார்களோ அது பிரமமன்று.

† உபநிடந்தங்களிற் குறிக்கும் பிரமசப்தம் சிவபெருமானையே குறிக்கும்." ப்ருஹத்வாத் ப்ருஹ்மணத்வாச் சசிவோபரஹ்மை வயோகத :" என்ற பராக்கியை

வாக்கியத்தானும், சிவவதனம் என்றதற்கு பஞ்சப்ரஹ்மவக்த்ரம்' எனப் பிரயோகமிருத்தலினாலும், சிவசத்திக்கே பிராஹ்மி எனப் பெயரிருத்தலினாலும், அப்பிராஹ்மிசத்தியைத்தாதான் மியமாகவுனடய சத்தனே பிரஹ்மமாகலினாலும், பிரஹ்மசப்தத்திற்குச் சிவபெருமானேயெனக் கோடலே சுருதிசம்மதம், பிரதிஷ்டாகலைப் பாலராம் நாராயணரை, இராமானுஜரும், மத்துவா சாரியரும் சாந்தியாதீதகலா சக்கரத்தைக் கடந்த பிரஹ் மசப்தத்துடன் பொருத்துவது அவாந்தர கற்பனையாம். இவ்வுபநிஷத்திற் போந்த யட்சுரூபமும் சிவபெருமானேயென்பதிற்றட்டில்லை.

---

### மந்திரம் - 5.

மனதினால் எது நினைக்க முடியாதோ, எதனால் மனம் மனனஞ் செய்கின்றதோ அதுபிரமம், எந்தவஸ்துவை இதுபிரமமென்று உபாசிக்கிறார்களோ அது பிரமமன்று.

### மந்திரம் - 6.

கண்களால் எது பார்க்கமுடியாதோ, எதனால் கண் பார்க்கப்படு கிறதோ அதுபிரமம், எந்தவஸ் துவை இது பிரமமெனறு உபாசிக்கிறார்களோ அது பிரமமன்று.

### மந்திரம் - 7.

காதினால் எது கேட்க முடியாதோ, எதனால் காது கேட்கப்பகி றதோ அது பிரமம். எந்தவஸ்துவை இதுபிரமமென்று உபாசிக்கிறார் களோ அது பிரமமன்று.

### மந்திரம் - 8.

பிராணவாயுவினால் எது தெரிந்து கொள்ளப் படாதோ, எதனால் பிராணவாயு சேட்டிக்கப் படுகிறதோ அது பிரமமன்று எந்த வஸ்துவை இது பிரமமென்று உபாசிக்கிறார்களோ அது பிரமமன்று.

## காண்டம் 2 - மந்திரம் - 1

பிரமத்தைத் தெரிந்து கொண்டேனென்று நீ நினைப்பாயாகில், அந்நினைவு அற்பமா கமுடியும், அப்பிரமத்தின் உருவத்தை நீதெரிந்து கொண்டே னென்று நினைப்பாயாகில் அதுவும், பிரமத்தின் உருவத்தைத் தேவதாரூபங்களில் தெரிந்து கொண்டேனென்று நினைப்பாயாகில் அதுவும் அற்பமாக முடியும், அப்பிரமம் சுவானுபவத்தால் தெரிந்து கொள்ள வேண்டியதுதான். அது தெரிந்து கொள்ளக் கூடியதாக நினைக்கின்றேன்.

## மந்திரம் - 2.

நான் அப்பிரமத்தைத் தெரிந்து கொண்டேனென்று நினைக்க வில்லை, தெரிந்துகொள்ள வில்லையென்று நினைக்கவில்லை, பின்னை யென்னெனில், சுவானுபவத்தால் தெரிந்து கொண்டேனென்று நினைக் கின்றேன், அவெண்ணத்தை எங்களில் எவன் தெரிந்து கொள்ளுகிறானோ அவன் பிரமத்தைத் தெரிந்து கொள்ளுகிறான்.

## மந்திரம் - 3.

எச்சாதகனுக்குப் பிரமமானது மனோ விருத்தி மாத்திரத்தால் கோசாமாகாதோ, அவனுக்குச் சொரூபானுபவத்தால் தெரிந்துகொள்ளப்படுகிறது, எவன் அப்பிரமம் தன் மனத்திற்குக் கோசரமாயிற்றேன்று அபிப்பிராயப்படுகிறானோ அவன் தெரிந்தவனல்ல, தெரிந்தவனென்பவனுக்குத் தெரியாது, தெரிந்து கொள்ளாதவனுக்குத் தேரிதுக்கொள்ளப்படும்.

## மந்திரம் - 4.

பிர்மம் எப்போது புத்தி விருத்தியில் சாட்சியாக விருப்பதாக அறியப்படுகிறதோ அப்போது அது நல்ல ஞானமாக ஆகிறது, ஏனெனில் அதனால் மோட்சத்தை யடைகிறான்.

## மந்திரம் - 5.

சத்யமாக ஒருவஸ்து உண்டென்று இச்சென்மத்தில் தெரிந்து கொண்டால் அப்போது நற்கதியுண்டாம், ஜீவித்திருக்கிறபோது தெரிந்து கொள்ளாவிட்டால் பெரிதான நஷ்டமுண்டாயிற்று, ஆகலின் தீரர்கள் ஒவ்வொரு பூதத்திலும் அப்பிரமத்தைத் தெரிந்து கொண்டு இவ்வுலகத்தினின்றும் மோட்சத்தை யடைகிறார்கள்.

# காண்டம் - 3 - மந்திரம் - 1.

பிரமமே அசுரர்களைச் செயித்தது, அவ்வசுர செயத்தால் தேவர்கள் மகிமை யடைந்தார்கள், இந்தச்செயம் நம்முடையதே யெனவும், சாமர்த்தியமு நம்முடையதே யெனவும் தேவர்கள் நினைத்தார்கள்.

## மந்திரம் - 2.

அப்பிரமம் தேவர்களுடைய தப்பெண்ணத்தைத் தெரிந்து கொண்டது,. அத்தேவர்கட்கு அனுக்கிரகஞ் செய்ய பிரமம் யட்சரூபமாக உத்பவமாயிற்று, இச்சொரூபம் இத்தகையதெனத் தெரிந்து கொள்ளா மற் போனார்கள்.

## மந்திரம் - 3.

தேவர்கள் அக்கினியை நோக்கி அக்கினிதேவே ! எங்கள் கண்களுக்குக் காணப்படுகிற இப்பெரிய வுருவத்தை இத்தகையதென நீ தெரிந்து கொள் என்றார்கள், அக்கினியும் அங்ஙனமே யாகட்டு மென் றனன்.

## மந்திரம் - 4.

அக்கினி யட்சுவின் சமீபத்தில் விரைந்து சென்றான், யட்சு நீ யார் என்று கேட்டது. நான் பிரசித்தமான அக்கினி, நான் பிரசித்தமான 'ஜாதவேத' என்றனன்.

## மந்திரம் - 5.

இத்தகைய பிரசித்தமான பெயரையுடைய உனது சாமர்த்திய மென்னென யட்சு கேட்க, இப்பூமியின் கண்ணுள்ள. ஸ்தாவர மனைத் தையு : மெரித்து விடுவே னென்றனன்.

## மந்திரம் - 6

அங்ஙனமாயின் நீ இத்துரும்பினை எரித்துவிடுக வென்று அவன் முன் போட்டது, அவ்வக்கினி துரும்பின் சமீபம் சென்று எரிக்க சாமர்த்திய மில்லாதவனாய்த் திரும்பித் தேவர்களை அந்த யட்சுவை இத்தகையதென்று தெரிந்து கொள்ள என்னால் முடியவில்லை யென்றான்.

## மந்திரம் - 7.

பின்பு தேவர்கள் வாயுவை நோக்கி, வாயுதேவனே! இந்த யட்சுவை இன்னதென்று நீ தெரிந்து கொண்டுவா என்றார்கள். வாயுவும் அங்ஙனமே யாகட்டு மென்றானன்.

## மந்திரம் - 8.

வாயு யட்சுவை நோக்கிச் சென்றான், யட்சு நீ யார் என்று கேட்டது, நான் பிரசித்தமான வாயு, நான் பிரசித்தமான 'மாதரிஸ்வா' என்றனன்.

### மந்திரம் - 9.

இத்தகைய பிரசித்தமான பெயரையுடைய உனது சாமர்த்திய மென்னென யட்சுகேட்க, இப்பூமியின் கண்ணுள்ள எல்லாப் பொருள் களையும் அரித்துக்கொண்டுபோவே னென்றனன்.

### மந்திரம் - 10

அங்ஙனமாயின் நீ இத்துரும்பினை அசைத்து விடுக வென்று அவன் முன் போட்டது. அவ்வாயு துரும்பின் சமீபம்சென்று அசைக்கச் சாமர்த்திய மில்லாதவனாய்த் திரும்பித் தேவர்களைப் பார்த்து, அந்த யட்சுவை இத்தகையதென்று தெரிந்து கொள்ள என்னால் முடியவில்லை யென்றனன்.

### மந்திரம் - 11.

பின்பு தேவர்கள் இந்திரனை நோக்கித் தேவேந்திர! இந்த யட்சுவை இன்னதென்று நீ தெரிந்து கொண்டுவா என்றார்கள், இந்திரன் அதனிடத்து ஓடுதலும் அந்த யட்சு இவனெதிரே மறைந்துவிட்டது.

### மந்திரம் - 12

இந்திரன் அவ்வாகாயத்தில், இமாசலபர்வதத்தின் புத்திரியாய் ‡ மிகவும் பிரகாசித்துக் கொண்டிருக்கிற உமாதேவியாகிய பெண்ணைப் பார்த்து இந்த யட்சு யாரென்று கேட்டான்.

‡ ஜமவதீம் என்பதற்கு இமாசலபர்வதத்தின் புத்திரி எனும் பொருள் பிரசித்தமாகவும், சங்கராசாரியர் சுவர்ணாபரணங்களுள்ளவள் என விபரீதப் பொருள் கொண்டாரேனும், உமா என்பதற்கு வேறுபொருள் குறிக்கவேவா தவராயினர். இராமானுஜர். உமாதேவியாகிய இலட்சுமியெனப் பொருள் கூறித் திருப்தியாயினர். இவர், இலட்சுமி ஜீல கோடிகளி லொருத்தியெனக் கொண்டிருக்கிற வைஷ்ணவசாம்பிரதாயத்தை மறந்தார்போலும்.

## காண்டம் 4. மந்திரம் - 1

அவ்வுமாதேவி அது பிரமமென மொழிந்தாள், இப்பிரமத்தின் ஜெயத்தினாலேயே நீர்மகிமையடைந்தீர்களென்றாள், இந்திரன் அவ்வசனத்தால் பிரமமெனத் தெரிந்து கொண்டான்.

## மந்திரம் - 2

இதனால் அக்கினியும் வாயுவும் இந்திரனும் மற்றதேவர்களைக்காட் டிலும் மேம்பாட்டினை யடைந்தார்கள், எனெனின் இவர்கள் அந்த பிரமத்தைத் தெரிந்து கொண்டார்கள்.

## மந்திரம் - 3

இக்காரணத்தினால் இந்திரனானவன் அக்கினி வாயுவுமான இவர் களைக்காட்டிலும் மேன்மை அடைந்தான், ஏனெனில் இந்திரனே சமீபத்தில் பிரமசொரூபத்தை முதலில் ஸ்பரிசித்துத் தெரிந்து கொண்டான்.

## மந்திரம் - 4

இது அந்தப் பிரமத்தைக் குறித்துரைக்கும் சத்திய மொழியாகும், அப்பிரமம், மின்னலொளியைப்போலப்பிரகாசித்து, கண்ணிமை முகிழ்ப்பிற் காந்துபோயது, ஆகலின், இவ்வுபமானம் மற்றையதேவர்களினும் இதனைக் குறிப்பிட்டறியத்தக்கது.

## மந்திரம் - 5

இனி ஆன்மாவுடன் அவனைக்குறிப்பிட்டறிதல் வேண்டும், மன மானது செல்கிறதுபோ லிருக்கிறது, மனதினால் சமீபத்திலிருக்கிற தாக நினைக்கின்றான், அடிக்கடி மனதின் சங்கற்பம் பிரமவிஷயமாக உண்டாகிறது, மனதால் தியானம் செய்யவேண்டியது.

## மந்திரம் - 6.

அது வியாபகமாக விருப்பதால் அது வியாபகமென்று உபாசிக் கத்தக்கது, எவன் இதையிப்படி உபாசிக்கிறானோ அவனைசமஸ்தமான பூதங்களும் பிரார்த்திக்கின்றன.

## மந்திரம் - 7.

(சீடன்) உபநிடதத்தில் இன்ன மேதாகிலு முண்டோ என (ஆச்சாரியர்) சொல்லுகிறார் உனக்கு உபநிஷத்து சொல்லப்பட்டது, உனக்குப் பிரமசம்பந்தமான உபநிஷத்தையே சொன்னேன், நிச்சயம்.

## மந்திரம் - 8.

அப்பிரம வித்தைக்காக கிருச்சிரமம் சாந்திராயண முதலியவிர தங்கள், அக்கினி கோத்திர முதலியவைகள், இந்திரியமடக்கல், வேதங்கள், வேதாந்தங்கள், பிரதிஷ்டைகள் சத்திய ஸ்தானங்களாம்.

## மந்திரம் - 9.

எவனாகிலும் இவ்வித்தையை முன் சொன்னபடி அறிகிறானோ அவன் பாபத்தைவிட்டு அந்தமில்லாததும், எல்லாவற்றிற்கும் அதிக மாதுமான சுகமாகிய உலகத்தின் ஸ்திதியை அடைகிறான்.

கேனோபநிஷத்து சம்பூரணம்.

மணவழகு.

சித்தாந்தம் - 1914 ஸூ - செப்டம்பர் மீ